


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
33rd year
of Publication
11—8—1968


## ஏன் இந்தப் பதற்றம் ?

— கோவை அ. அய்யாமுத்து

பாகிஸ்தானுக்குச் சோவியத் நாட்டிலிருந்து யுத்த தளவாடங்கள் ஏற்றுமதியாகிறதென்று கேள்விப்பட்டவுடனே நாம் குய்யோ முறையோவென்று கூப்பாடு போட ஆரம்பித்து விட்டோம்.

இப்படிக் கூச்சலிட்டது சரிதானா ?

நமக்கும் ருஷிய நாட்டிற்கும் என்ன பந்தம்? என்ன உறவு? தாயும் பிள்ளையானாலும் வாயும் வயிறும் வேறல்லவா? இருவர் நலத்தையும் ஒன்றோடொன்று இணைக்க முயல்வது இந்த நாளில் ஆகுங்காரியமா?

பந்தமில்லாவிடினும் ஏதாவது ஒப்பந்தமேனும் உண்டா? ஒன்றுமில்லாத நிலையில் ஏனிந்தக் கூச்சல்?

1965ல் பாகிஸ்தான் நம் மீது படையெடுத்தது. நம்மையும் பாகிஸ்தானையும் ருஷியா தனது நாட்டில் சந்திக்கச் செய்தது. ஆக்ரமித்தவனையும், ஆக்ரமிப்புக்கு ஆளான நம்மையும் ருஷியா சரி சமமாகப் பாவித்த அன்றே நமக்குப் புத்தி தெளிந்திருக்க வேண்டுமே?

சூயஸ்கால்வாய் தகராறில் பிரிட்டனும், பிரான்சும், இஸ்ரேலும் கெய்ரோவின் மேல் பாய்ந்தன. உடனே ருஷியா கெய்ரோவுக்காதரவாக ஆகாயக்கப்பல்களும் இதர போர் சாதனங்களும் அனுப்பியதுடன் நில்லாமல், ஆக்ரமிப்பை உடனே நிறுத்தாவிட்டால் அணு வாயுதங்களையும் வேவுகணைகளையும் அனுப்புவோமென்று பிரிட்டனையும் அமெரிக்காவையும் எச்சரித்தது. போரும் நின்றது.

ஊரில் ஒரு நாய் குரைக்கவாரம்பித்தவுடனே ஊரிலுள்ள நாய்களெல்லாம் மூலைக்கொன்றாகக் குரைக்கும். அம்மாதிரி நாமும் அன்று பிரிட்டனைப்பார்த்து, உப்புப் புளி மிளகாயுக்கும் நமக்கு உதவாத நாஸருக்குப் பரிந்து குரைக்குமாறு வி. கே. கிருஷ்ணமேனனை ஏவினோம்?

அதன் பயனாக நாம் வாரிக்கட்டிக் கொண்டது என்ன? அங்கேரியில் ருஷியர் அட்டூழியங்கள் புரிந்தபோது நாம் வாயை மூடிக்கொண்டிருந்தோமே!

இந்தி—சீனி பாய் பாய் என்றுசீனனோடுகைகோர்த்துக்கொண்டு தில்லிமா நகரில் ஊர்வலம் சென்றோம். பஞ்சசீலமென்று பாருக்கெல்லாம் பாதிரியார் போன்றுவேதமோதினோம். கடைசியில் சீனன் திபேத்தில் வஞ்சசீலம் புரிந்தானே நாம் வாய்திறந்தோமா? நமது நாட்டுக்குப் பறந்தோடி வந்து தஞ்சம்புகுந்த தலாய்லாமாவைக்கூட வாயை மூடிக்கொண்டு சும்மா இருக்குமாறல்லவா நாம் உபதேசித்தோம்!

திபேத்துமக்களை சீனன் கொன்று குவித்தானே. அதைப்பற்றி நாம் உலக சபையில்கூட வாய்திறக்கவில்லையே!

வாரைக் கடித்துத் தோலைப் பதம்பார்த்து, ஆட்டைக் கடித்துக் ஆளையும் கடிக்கவந்த நரிபோல் சீனன் கடைசியில் நம்மீதும் பாய்ந்தானே, அந்த நேரத்தில் அமெரிக்காதானே நமது உதவிக்கு வந்தது. ஐந்து நிமிஷத்துக்கொரு ஆகாய விமானம் நிறையச் சுழல் துப்பாக்கிகளைச் சுமந்து வந்து கல்கத்தாவில் கொடுத்து நமது மானத்தைக் காப்பாற்றிற்று.

விமானந்தூக்கிக் கப்பலொன்றையும் வங்காள விரிகுடாவில் கொண்டு வந்து அமெரிக்கா நிறுத்தி நமக்கு அபயம் அளித்தது.

அமெரிக்காவின் உதவியைக் கண்டுதானே சீனன் விரண்டு மருண்டு உருண்டு ஓடினான்.

அதன்பின்ருஷியா என்ன சொல்லிற்று? அதுவரை வாயே திறவாதிருந்த ருஷியா என்ன சொல்லிற்று?

'சீனத்துக்கும் இந்தியாவுக்கும் இடையே யுத்தத்தைப் பலப்படுத்தி, விஸ்தரித்து ஆதாயம் அடையப் பார்த்த அமெரிக்காவின் எண்ணத்தில் மண்ணைப் போடும் விதத்தில் யுத்த களத்தினின்று சீனன் வாபஸ் பெற்றுவிட்டதாக வல்லவா ருஷியா சோசலிச கீர்த்தம் பாடிற்று?

செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும், வானுலகும் மாற்றலரிதென்று எப்பவோ இரண்டாயிரம் வருஷங்களுக்குமுன் வள்ளுவன் பிதற்றினான்.

நாம், இருபதாம் நூற்றுண்டில் வாழும் நவபாரத சிரோன்மணிகள் என்ன செய்தோம். வடவியட்நாமில் குண்டுவீசுவதை நிறுத்தென்று அமெரிக்காவுக்கு நல்லுபதேசம் செய்து வருகிறோம்.

வியட்நாம் போர் நின்றவுடன் சீனன் அடுத்து யார் மீது போர் தொடுப்பானென்று நமக்கெப்படித் தெரியும்?

சீனாவுக்கும் ருஷியாவுக்கும் எதிராக உளவறிவதற்கும் வேவுகணைகள் எய்துவதற்கும் அநுகூலமாக அமெரிக்கா பாகிஸ்தானில் தளம் அமைக்க இடம் பெற்றது. அதற்குப் பிரதியுபகாரமாகப் பாகிஸ்தானிற்கு அமெரிக்கா முந்நூறுகோடி

டாலர் யுத்த சாதனங்களைக் கொடுத்தது.

அப்போதும் நாம் கூச்சல் போட்டோம்.

'உனக்கு வேண்டுமானால் யுத்த தளவாடங்கள் நீ கேட்குமளவுக்கும் அதிகமாகவே இலவசமாகத் தருகிறேன். என்னுடன் கூட்டுச் சேருகிறாயா' வென்று அமெரிக்கா நம்மிடம் கேட்டது.

'யார் எங்களுக்கு விரோதி. யாருக்கு எதிராக நாங்கள் உன்னோடு கூட்டுச் சேரவேண்டும்' என்று நாம் அதட்டிப்பேசி அமெரிக்காவின் 'ஆணவத்தை' அடக்கினோம்.

அப்படியிருந்தும் சீனன் நம்மீது படையெடுத்தவுடன், நாம் அலறித் துடித்ததைக்கேட்டு அமெரிக்கா 'தானே இயங்கும் துப்பாக்கிகளை' நமது கைகளில் கொண்டுவந்து திணித்தது!

அமெரிக்காவின் வேவு தளத்துக்கு பெஷாவாருக்கருகில் பாகிஸ்தான் இடங் கொடுத்து யுத்த சாதனங்களை அன்று பெற்றது. கம்யூனிச நாடுகளுக்கு எதிராகப் பாகிஸ்தானைப் பயன்படுத்திக்கொள்ளலாமெனக்கருதி 'முதலாளித்துவ' நாடான அமெரிக்கா பாகிஸ்தானத்தில் யுத்த தளவாடங்களைக் கோடிக் கணக்கில் குவித்தது.

இன்று ருஷியா பாகிஸ்தானத்தை வருடி உச்சி முகர்ந்து, அணைத்துத்தழுவி முத்தமும் தந்து,

'கண்ணே! நீ அமெரிக்க தளத்தை அப்புறப்படுத்து, நான் உனக்குப் பதினேழு மைல் தூரம் பாயும் பீரங்கிகளையும், வாயுவேகத்தை விடப் பன்மடங்கு வேகமாகப் பறக்கும் விமானங்களையும், கண்மூடிக் கண் மூடிக் கண் திறப்பதற்குள் குறித்த இடத்திற்குப் பாய்ந்துசெல்லும் கணைகளையும், மற்றும் டாக்கிகள், டிரக்குகள், ஜீப்புகள், லாரிகள், இன்னும் உனக்கு என்னென்ன வேண்டுமோ அனைத்தையும் கொணர்ந்து உனக்கு நவீன யுத்த முறைகளையும் கற்றுத் தருவதுடன் அணுசக்தி நிலையமொன்றும் கட்டித் தருவேன்' என்றது.

அமெரிக்க தளத்தை அப்புறப்படுத்துமாறுபாகிஸ்தான் நோட்டீசு கொடுத்துவிட்டது.

தனது செல்வாக்கை உலகெங்கும் பரப்பி அதன் மூலம் தனது நாட்டுநலனைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டுமென்பதுதான் ருஷியாவின் ஒரே குறிக்கோள்.

தனது படைபலத்தைத் திரட்டி, அதன்மூலம் இந்தியாவை மிரட்டித் தனது எல்லைகளை விஸ்தரித்துக் கொள்ள வேண்டுமென்பது பாகிஸ்தானின் தற்போதைய குறிக்கோள்.

கூட்டுச் சேர்ந்தோ, கொஞ்சியோ, குலாவியோ, கெஞ்சியோ வஞ்சித்தோ எப்படியோ எங்கெங்கெல்லாமிருந்தோ ஆயுதங்களைப் பாகிஸ்தான் பெற்றுக்கொண்டே இருக்கிறது, பிரிட்டன், பிரான்ஸ், இத்தாலி, ஜர்மனி துருக்கி, ஈரான், அமெரிக்கா, சைனா, ருஷியா போன்ற சகல நாடுகளிலிருந்தும் பாகிஸ்தானில் இராணுவ தளவாடங்கள் கடந்த இருபத்தோராண்டுகளாக இறக்குமதியாகிக்கொண்டே இருக்கின்றன. நாமும்தொண்டை கிழியக் கத்திக்கொண்டும், ஆட்சேபணைக் குறிப்புகள் அனுப்பிக் கொண்டுமிருக்கிறோம்.

சைனா நம்மீது படையெடுத்தபோது அமெரிக்கா நமது உதவிக்கு வந்ததை நாம்நன்றியுடன்பாவித்துத் தொடர்ந்து நமது நட்பை அந்நாட்டுடன் பலப்படுத்திக்கொள்ளாமல், தினவெடுத்தமாடு தேய்ப்புக் கல்லில் உரசிக்கொள்வது போல், அமெரிக்கா தனது பகைவனை சீனனுக்கு எதிராக நமது உதவிக்கு வந்ததாகத் தடிமுட்டாள் தனமாக நம்மில் பலர் எண்ணிக்கொண்டனர்.

கடந்த சில வருஷங்களாக ருஷியாவும் நமக்குத் தளவாடங்களும் இதர சாமான்களும் அனுப்பிக் கொண்டுதானிருக்கிறது. ஆனால் அவையாவும் நமக்கு உபகாரமாகவோ, உதவியாகவோ, அன்றி யாசகமாகவோ வரவில்லை. ருஷியாவுக்கு உபயோகமில்லாத தளவாடங்களை நமது தலையில் கட்டி, அவற்றிற்குக் கிரயமாக நம்மிடம் ரூபாய்களாகப்பெற்று, அந்த ரூபாய்களுக்குத் தனது நாட்டில் கிடைக்காத செருப்புகள், ஜோடுகள், துணிமணிகள் முதலானவற்றை இங்கிருந்து ஏற்றிக்கொண்டு மற்றும் நமக்கு அந்நியச் செலாவணி பஞ்சமுள்ளகாரணத்தால், கிழக்கு ஐரோப்பாவிலுள்ள கம்யூனிஸ்டு நாடுகளிலிருந்தும், கிழக்கு ஜர்மனியிலிருந்தும், நமக்குத் தேவையான பல பொருட்களை நாம் ருஷ்யாவின் மூலம் ரூபாய்ச் செலவாணியில் வாங்கிக் கொண்டு வருவதால் ருஷியா நம்மிடம் சர்வ கொள்ளையடித்து வருவதாக விஷயம் தெரிந்த வட்டாரத்தினர் கூறுகின்றனர். நாமே நேராக அந்நாடுகளிலிருந்து ஒரு சாமானை வரவழைத்தால் முந்நூறு ரூபாய் கிரயமாகக்கூடிய பொருளுக்கு நாம் ருஷியாவின் மூலம் வரவழைப்பதால் மூவாயிரம் ரூபாய் கொடுக்க வேண்டியிருக்கிறதென்றுகோவைத் தொழில் பிரமுகர் ஒருவர் தெரிவித்தார். அவ்வாறு மூன்றாவது நபர் வழியாக நாம் வரவழைக்கும் மெஷினரியில் ஏதாவது ஒரு சிறிய பாகம் பழுதுபட்டுவிட்டாலும், சப்ளையர்களிடம் நமக்கு நேரடித் தொடர்பில்லாத காரணத்தால், அச்சிறிய பாகம் உரிய காலத்தில் நமக்குக் பெருவாரியான கஷ்டநஷ்டங்களும், உற்பத்தித் தாமதமும் ஏற்படுவதாகச் சொல்கிறார்கள்.

சோழியன் குடுமி சும்மா ஆடாது என்ற மூதுரைக்கொப்ப இன்று ருஷியா பாகிஸ்தானுக்கு இலவசமாக ஒன்றையும்கொடுக்கப் போவதில்லை. அதனிடம் மிதமிஞ்சிக் கிடக்கும் தளவாடங்களை அனுப்பிவிட்டு, அதற்குப்பதிலாகப் பாகிஸ்தானிலுள்ள பொருட்களை வாரிக் கொள்ளத்தான் போகிறது.

கம்யூனிஸ்டு நாடுகளான ருஷியாவுக்கும், சைனாவுக்

[ 8-ம் பக்கம் பார்க்க ]

# விவசாயிகளும் நாயும்

விவசாயிகளுக்குத் துணை செய்கின்ற உயிர்ப் பிராணிகளில்' நாயையும் முக்கியமான ஒன்ருகக் கருதலாம். கிராமங்களில் ஒவ்வொரு விவசாயியும் நாய் வளர்ப்பதைப் பலர் கண்டிருக்கலாம். வீட்டுக்கும், கால்நடைப் பண்ணைக்கும் காவலனுக இருந்து நாய் விவசாயிக்குச் செய்யும் உதவி மிகப் பெரிதாகும். வயல்களில் ஆடுகளைக் கொண்டுபோய்க் 'கிடை' போடும் வழக்கம் எல்லா இடங்களிலும் உண்டு. அந்த ஆடுகளை யாரும் திருடிச் சென்றுவிடாமலிருக்க விவசாயிகள் வயலில் போய்ப் படுத்துக்கொள்வார்கள். அவர்கள் வளர்க்கும் நாயும் அக்காவல் வேலையில் அவர்களுக்குப் பெருந்துணை புரியும். நாய்களின் உதவி இல்லையானுல் இரவு நேரத்தில் ஆட்டுக்கிடைகளில் ஆடுகளைத் துன்புறுத்தவரும் ஓநாய், நரி முதலான விலங்குகளின் தொந்திரவையும், திருடர்கள் பயத்தையும் விவசாயிகள் தவிர்ப்பது மிகக் கடினமாகிவிடும்.

வயல்களில் அறுவடை செய்த தானியங்களைக் காவல் புரிவதற்கும் துணை புரிகின்றன. தானியங்களை வீட்டில் கொண்டுவந்து சேர்த்த பிறகும் விவசாயிகள் திருடர்களுக்கு அஞ்சி எச்சரிக்கையாக வாழ வேண்டியிருக்கிறது. நரி முதலிய உயிர்ப் பிராணிகள் சில சமயம் ஊருக்குள் புகுந்து விவசாயிகளின் ஆடு, கோழி முதலானவற்றைக் கவர்ந்து சென்று விடுவதுண்டு. விவசாயிகளின் வீட்டிலுள்ள நாய்கள் இப்படிப்பட்ட துன்பங்களிலிருந்து விவசாயிகளின் செல்வத்தைக் காக்கும்.

விவசாயக் குடும்பத்தினர் வயலில் வேலை செய்யும்போது தங்கள் குழந்தைகளையும் பொருள்களையும் மரத்தடியிலோ, தனியிடத்திலோ விட்டுச் செல்வதுண்டு. அப்போது நாய்கள் அவற்றின் அருகிலிருந்து காவல்காத்து உதவும். நாய்களுக்கு இருக்கும் மோப்ப சக்தி காரணமாகக் கண்டுகொள்கின்றன. நாய்களுக்கு நல்ல நினைவாற்றலும் உண்டு. இதனுல் வீட்டிலும் வயலிலும் நாய்கள் விவசாயிக்குத் தக்க பாதுகாவலனுகவும், உயிர்த் தோழனுகவும் விளங்க முடிகிறது. விவசாயிகளுக்கு வயலில் வேலை அதிகமில்லாத கோடை மாதங்களில் முயல் வேட்டை முதலானவற்றிற்காக அவர்கள் செல்வதுண்டு. அப்படி வேட்டைக்குச் செல்லும் காலங்களில் நாய்களையும் கூட்டிச் செல்வார்கள். வேட்டையின் போது நாய்கள் அவர்களுக்குப் பெருந்துணை புரியும்.

நாய் ஒரு நன்றியுள்ள பிராணி. சில ஜாதி நாய்கள் பார்ப்பதற்கும் மிக அழகாய் இருக்கும். அதனுடைய எஜமான விஸ்வாசத்தையும், நன்றி மறவாமையையும் கருதிப் பெரியவர்களெல்லாங்கூட அச்சிறு பிராணியின் சிறப்பை மிக பலபடப் பாராட்டிப் பேசியிருக்கிருர்கள். இலக்கியங்களில் நாயின் நன்றி மறவாமை மிகச் சிறப்பித்துப் பேசப்படுகிறது.

வெளிநாடுகளில் கிராமவாசிகள் நாய்களைச் சில சிறுசிறு வேலைகள் செய்யவும் பழக்கிவைத்திருக்கிருர்கள். சிறு வண்டிகளை இழுப்பதற்கும், காய்கறிக்கடை முதலானவற்றைத் தூக்கிக்கொண்டு துணையாக உடன் வருவதற்கும், பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்குத் துணையாகச் செல்வதற்கும் குருடர்களுக்கு வழிகாட்டிச் செல்வதற்கும் நாய்களைப் பழக்கலாம்.

இப்படிப் பலவகையிலும் மனிதர்க்கு உதவக்கூடிய நாய்களைத் தெரிந்தெடுத்து வளர்ப்பதிலும் நாம் சில முறைகளை அனுசரிக்க வேண்டும்.

குழந்தைகளை நல்ல முறையில் சொல்லிக் கொடுத்து வளர்த்தால் எப்படி அவைகள் நாட்டிற்கு நல்ல குடிமக்களாக வளர்ந்து வாழ்வார்களோ அதேபோல நாய்களையும் நல்ல தரமறிந்து செவ்வையாக வளர்த்தால் அவைகள் அளவு கடந்த வேலைகளுக்கு உதவும்.

குட்டியாக இருக்கும்போது நாய்களை வளர்ப்பதில் சில சிரமங்கள் உண்டு. கண்ட இடத்தில் அவைகள் மலஜலம் கழிக்காதபடி முதலில் அவற்றிற்குப் பயிற்சி அளிக்கவேண்டும். சிறிது அக்கரையோடு பயிற்சி அளித்தால் அவற்றைச் சுத்தமாக இருக்கும்படி எளிதில் செய்துவிட முடியும். ஆகாரம் கொடுப்பதைக்கூட முறையான வேளையும், நேரமும் வைத்துக்கொடுத்து வரவேண்டும். ஒரு குறிப்பிட்ட நேரத்தில்தான் உணவு கொடுப்பதென்று முறை வைத்துக்கொண்டால் சரியான நேரம் வந்ததும் நாய்கள் எஜமானனை நினைவூட்டத் தொடங்கும். நாய் வளர்ப்பவர்கள் ஆரம்பத்தில் ஒவ்வொரு விஷயத்திலும் கருத்துச் செலுத்தி ஒவ்வொரு காரியத்திலும் நன்ருக அவற்றைப் பழக்கிவிட்டால் பிறகு அவர்களுக்கு ஒருவித சிரமமும் இருக்கமாட்டாது. கெடிகாரம் தவறினுலும் மணியும் நேரமும் தவருதபடி நாய்கள் தனக்குரிய காரியத்தை அவ்வப்போது செய்யும்.

நாய்களை எந்த நேரமும் கட்டிப்போடாமல் சில நேரங்களில் அவிழ்த்து விட்டுச் சுதந்திரமாகத் திரிய வேண்டும். நாய்கள் நல்லறிவுடைய பிராணிகளாக இருந்தாலும் அவற்றின் அறிவின் எல்லைக்கும் ஓர் வரையறை உண்டு. எனவே அவைகள் ஏதும் தவறு செய்தால் உடனே கோபங்கொண்டு அவற்றைத் துன்புறுத்திவிடக்கூடாது. ஈட்டியை வைத்துக் குத்தினுலும் எஜமானிடம் வாலைக் குழைத்து நன்றியோடு நடக்கும் தன்மையுடைய பிராணி ஒன்றுதான். வேறு எந்தப் பிராணிக்கும் இந்தக் குணம் இவ்வளவு கிடையாது. இந்தச் சிறந்த குணத்தை நாம் மிகவும் மதித்து நாய்களைத் துன்புறுத்தாமல் பேண வேண்டும்.

நாய் மனிதனுக்குச் செய்யும் உதவிகளையும், அதன் நன்றிமறவாமையையும் நினைத்தால் சமூக வாழ்வில் மனிதன் அதற்கு மிகுந்த மதிப்பு கொடுக்கவேண்டும். சாதாரணமாக ஒருவனை இழிவாகக் கூறுவதற்கு 'எச்சிக்கலை நாயே, என்ற சொல்லை உபயோகப்படுத்துவதை நாம் நடைமுறையில் காண்கின்ருேம். இது நாயின் பல நல்ல குணங்களை அவமதிப்பதாக இருக்கிறது. தான் தின்றதையே வெளியில் கக்கிவிட்டு மீண்டும் எடுத்துண்பது போன்ற சில இழிவான குணங்கள் கருதியே அதனை 'எச்சிக்கலை நாய், என்று இழிவாக மக்கள் பேசி வந்திருக்கிருர்கள். அப்படி ஓரிரு இழி குணங்கள் அவற்றுக்கு இருந்தாலும் ஏனைய பல விதங்களில் நாய்கள் மனிதனின் உற்ற தோழனுகவும், உயிர்த் துணைவனுகவும், நல்ல வேலைக்காரனுகவும் இருப்பதற்குரிய முழுத் தகுதிகளையும் பெற்றிருக்கின்றன என்பதை நாம் மறந்துவிடக்கூடாது.

# பெரியவர்கள் என்ன சொன்னார்கள்

— எஸ். சாவித்திரி

குடும்பக்கட்டுப்பாட்டைப் பற்றி நம்முன்னோர்கள் சிந்தித்ததுண்டா, அல்லது அது இன்று மட்டும் தோன்றிய நவீனக் கொள்கையா என்பது ஒரு கேள்வி.

இச்சையை அடக்கிக் கட்டுப்பாடாகவாழவேண்டுமென்பதும் பழங்காலந்தொட்டு நம்முன்னோர் கொண்டகொள்கையாகும். பன்றி குட்டிபோட்டது போலப் பல குட்டிகளைப் பெற்று எடுப்பதனால் பல குட்டிகளைப் பெற்று எடுப்பதால் பலனில்லையென்றும் யானையைப்போல ஒரு சிறந்த மகவு இருந்தாலும் போதும் என்றும் நம் பெருமக்கள் கருதி வந்தனர்.

'பன்றி பல குட்டி ஈந்துமென்ன,
குஞ்சரமொன்றீந்ததனாற் பலமுண்டாமே!

என்று ஒரு தமிழ் பாடல் போதிக்கிறது. நம்முடைய இதிகாசங்களிலும் புராணங்களிலும்கூடப் பல இடங்களில் அதிகமான பிள்ளை பெறுவது ஏளனம் செய்யப்பட்டிருக்கிறது.

மகாபாரதம் இந்திய மக்கள் பெரிதும் மதிக்கும் ஒப்பற்ற இதிகாசமாகும். அதில் கௌரவர்கள் நூறு பேரும் இறந்து போனதை விவரிக்கும் இடம் ஒன்று வருகிறது. கௌரவர்கள் இறந்து போனார்கள் என்று காத்தாரி வருந்தி அழுகிறாள், நூறு பேரை இழந்தத் துன்பத்திற்கு அழும் காத்தாரியைக் கண்டு இரக்கப்படுவதற்குப் பதிலாக ஏளனம் செய்கிறாள் பௌமிக்.

'ஈக்கள் போல் பிறந்த குழந்தைகள் ஈக்கள் மடிவதுபோல் மடிந்து விட்டன.

இதன் உட்கருத்து என்ன. நிறைய குழந்தைகளைப் பெற்றவர்கள் பெரிய துன்பத்திற்கு ஆளாக வேண்டுமென்பதுதானே?

இதிகாச புராணத்தில் இதுப்போலப் பெருங் குடும்பத்தை இடித்துக்காட்டிப் பேசும் இடங்கள் எத்தனையோ உள்ளன.

அறிவுடைய மக்கள் ஒருவரோ இருவரோ இருந்தால் போதுமென்பதுதான் நம் முன்னோர் காலந்தொட்டு இருந்து வந்த கருத்து.

பெரியவர்கள் எல்லாம் இதைத்தான் கூறியிருக்கிறார்கள். துன்பங்களுக்கெல்லாம் காரணம் இச்சை யென்றும், இச்சையை அடக்க வேண்டுமென்றும் கூறுவதன் உட்பொருள் என்ன? அதிகக் குழந்தைகள் பிறந்தால் பந்தபாசத்தால் அதிக துன்பம் என்று பேசுவதற்கும் குறைவான குழந்தைகளோடு மகிழ்வாக வாழுங்கள் என்று இன்று நாம் சொல்வதற்கும் என்ன வேறுபாடு.

மகான் இராமகிருஷ்ண பரமஹம்சரின் மனைவி சாரதாமணி தேவியாரிடம் ஒரு ஏழைப்பெண் சென்றாள். தன்னுடைய துன்பங்களையெல்லாம் தேவியிடம் கூறிக்குறைப்பட்டுக்கொண்டாள். உய்யவழி தெரியாமல் தவிப்பதாக அவள் உரைத்தாள். அதற்கு சாரதாமணி தேவியார் என்ன சொன்னாள் தெரியுமா?

'ஒவ்வொரு ஆண்டும் ஒரு குழந்தையை பெற்றெடுத்து விட்டு என்னிடம் வந்து இப்படிக் குறைப்பட்டுக் கொண்டால் என்ன செய்ய முடியும். கட்டுப்பாடு என்பது உன்னிடம் சிறிதுகூட இல்லை. அப்படி வாழ்ந்து விட்டு என்னிடம் வந்து இப்போது எப்படி உய்வேன் என்று கேட்கிறாய், நான் என்ன செய்யலாம் என்று கேட்டாள்.

இதிலிருந்து குடும்பத்தைக் கட்டுப்படுத்தி அளவான குழந்தைகளோடு வாழ்வதுதான் துன்பம் அகலும் வழியென்பதை அவர்கள் கூறாமல் கூறி இருக்கிறார்கள்.

வங்கக் கவிஞர் ரவீந்திரநாத் தாகூர் குடும்பக் கட்டுப்பாட்டைப் பற்றி உறுதியான கருத்துக் கொண்டிருந்தார், அவர் தான் எழுதிய கதையொன்றில் ஒரு கிராம வாழ்க்கையைப் பின்வருமாறு சித்தரிக்கிறார்.

'கிராம மக்களின் வாழ்க்கையைப் பாருங்கள். அவர்கள் வருமானமோ குறைவானது. பிள்ளை குட்டிகள் அதிகமாகப் பிறந்து கொண்டேபோனால் அவற்றுக்கேற்ப வருமானம் அவர்களுக்கில்லாமல் போய்ப் பற்றாக்குறை மிகுந்து கொண்டே போகும். ஆகவே தாத்தா பாட்டிக்கிருந்த ஆரோக்கியமும் வளமான வாழ்வும் பேரன் பேத்திகளுக்கிருப்பதில்லை. இக்காரணத்தாலேயே நம் கிராமங்களில் எங்குபோனாலும் எலும்பும் தோலுமான இளைஞர்களையும் வயிற்றுக் கட்டி வந்த குழந்தைகளையும் பார்க்க நேருகிறது. உண்மை இப்படி இருக்க பலர் இந்த வறுமை நிலைக்கு கடவுளையும் காளியையும் விதியையும் சுட்டிக்காட்டுவது ஏன்'

மேலே சொன்னவற்றில் கவியரசர் தாகூர் குடும்பக் கட்டுப்பாட்டின் அவசியத்தைச் சுட்டிக்காட்டாமல் சுட்டுகிறார்.

குடும்பக் கட்டுப்பாட்டுக் கொள்கையைப்பற்றிப் பிரசாரம் செய்துவந்த திருமதி மார்கரெட் சாங்கருக்குத் தாகூர் ஒரு முறை பின்கண்டவாறு ஒரு கடிதம் எழுதினார், குடும்பக்கட்டுப்பாடு இயக்கம் மிக முக்கியமானதென்பதை நான் நம்புகிறேன். தாய்மீது சுமத்தப்படுகிற வேண்டாத சுமையை அது குறைக்கிறது. அதுமட்டும் அல்ல. வெளியாரின் கையை நாம் உணவுத் தேவைக்கு நம்பியிருக்கும் கேவல நிலையிலிருந்து நம் தேசத்தை விடுவிக்கிறது.

இப்படிப் புராண இதிகாச காலத்திலிருந்து நவீன காலம்வரை நம் இந்தியப் பெரியவர்கள் கருத்துக்களைத் துருவி ஆராய முற்படுவோமானால் அவர்கள் எல்லோருமே குடும்பக் கட்டுப்பாடு நாட்டின் தேவை என்பதைத்தான் நேரடியாக மறைமுகமாகவும் உணர்த்தியிருக்கிறார்கள்.

## கதிரவன்

கதிரவனின் முழு உருவத்தையும் கண்ணெதிரே கண்டுகொள்ளுமளவுக்கு மிக சக்தி வாய்ந்த தொலை நோக்கி ஒன்று ஜெர்மன் கூட்டாட்சிக் குடியரசில் அமைக்கப்பட்டுள்ளது. சூரியனின் தோற்றத்தை மிக அருகாமையில் கண்டு கவனிக்க இது பெரிதும் உதவுகிறது. இந்த தொலை நோக்கி தரையில் வைக்கப்படாமல் வானவெளியில் பதினைந்து மைல் உயரத்தில் பறக்கவிடப்படவிருப்பது மற்றொரு அம்சமாகும். தரையிலிருந்து தொலை நோக்கியின் மூலம் சூரியனை ஆராய்வதற்கு இடைஞ்சலாக வானவெளியில் 15 மைல் உயரம் வரை வாயு மண்டலம் குறுக்கிடுவதால் பதினைந்து மைல்களுக்கப்பால் இந்த தொலை நோக்கியைப் பறக்கவிட முடிவெடுக்கப்பட்டுள்ளது. மேற்கு ஜெர்மனியின் பருவநிலை தொல்லை தரக்கூடும் என்பதால் அமெரிக்காவிலுள்ள டெக்சாசிலிருந்து செலுத்த கருதியுள்ளனர்.

[ யூ. பி. எஸ். ]

# யு. எஸ். கல்வி பற்றித் தமிழக அதிகாரி பாராட்டு

அமெரிக்க நாட்டுக் கல்வி விரிவானது. மாணவர்கள் தம் வருங்கால வாழ்க்கைக் குத் திட்டமிடுவதில் எல்லை யில்லாத வாய்ப்பும், வசதி யும் அதில் உண்டு. அவர் கள் விரும்பும் பாடத்தை எடுத்துப் படிக்கலாம். இவ் வாறு விரிவான ஒரு கல்வி முறையை வகுத்துள்ளமை, கல்விக்கு அமெரிக்கா ஆற்றியுள்ள ஈடு இணையற்ற



கே. மோகனரங்கம்

பணியாகும் — இவ்வாறு கூறுகிறார். கே. மோகன ரங்கம்; இவர் தமிழகப் பள் ளிக் கல்வி இயக்குநர் (டி. எஸ். இ.) அலுவலகத்தில் துணை இயக்குநராகப் பணி புரிபவர்.

அமெரிக்காவில் ஆறு மாதம் சுற்றுப்பயணம் செய்து, அந்நாட்டுக் கல்வி முறைபற்றி நேரில் கண் டறிந்து அண்மையில் திரும்பி வந்துள்ளார் இவர். அந்நாட்டில் துவக்கக்கல்வி, இடைநிலைக்கல்வி அமைப்பு கள்பற்றி நன்கு ஆராய்ந் தார். 'என்னைப் பெரிதும் கவர்ந்தது, அங்கு நடப்பி லுள்ள விரிவான கல்வி முறைதான்; பலப்பலவகை யான பாடத் திட்டங்கள் உண்டு; மாணவர்கள் விரும் பிய பாடத்தைத் தெரிந் தெடுத்துப் படிக்கலாம்' என்று அவர் குறிப்பிட்டார்.

இந்தியாவில் கல்வி பெரி தும் ஏட்டுப் படிப்பாக இருக் கிறது; ஒரு தொழில் செய்து பிழைப்பதற்கு உகந்த அடிப்படையில் அமைய வில்லை. என்று அவர் சுட் டிக் காட்டினார். 'எடுத்துக் காட்டாக, இங்குள்ள நமது பள்ளிகள் சிலவற்றில் பொறி யியல், மனையியல், வேளாண்மை அல்லது அலுவலகப் பணி போன்ற ஒரு சில விருப்பப் பாடங் களே உண்டு. அமெரிக்கா வில் மாணவர்கள் விரும்பி எடுத்துப் படிப்பதற்கு, வாணிபம், குடும்பப் பொரு ளியல் போன்று எத்தனை எத்தனையோ பாடங்கள் உண்டு' என்றார், அவர். இது ஒரு நல்ல அமைப்பு; பயனுள்ள முறையில் இந் நாட்டிலும் இதனைக் கொண்டுவர முடியும் என்று அவர் கருதுகிறார்.

அமெரிக்கக் கல்வி அலு வலகமும், வெளி உறவுத் துறையும் நடத்தும் உலக ஆசிரியர்பணிமேம்பாட்டுத் திட்டத்தின்கீழ், மோகன ரங்கம் அமெரிக்கா சென்றார் திட்டத்தில் பங்குகொண்ட 17 இந்திய ஆசிரியர்களில் இவர் ஒருவர்.

அவரவர் திறமைகள், ஆர்வம் இவற்றிற்கு ஏற்ப, சமுதாயத்தில் தமது நிலை யையும், பொருளாதார வசதியையும், தனி வாழ் க்கையையும் உயர்த்திக் கொள் ஒவ்வொருவருக்கும் உரிமை இருக்கவேண்டும் என்று அமெரிக்கர்கள் நினைக்கின்றனர். இவ்வாறு

[ 8-ம் பக்கம் பார்க்க ]





அமுத வாக்கு

வையகத்தே சடவஸ்து விடவில்லை
மண்ணுங் கல்லும் சடமில்லை
மெய்யுரைப்பேன் பேய் மனமே
மேலும் கீழும் பயமில்லை !

எழுத்துத் துறையில் ஒரு சர்வதேசத் திட்டம்:

# இளம் இந்தியப் பெண்மணிக்கு ஊக்கம்

ஐந்து நல்ல சிறு கதைகள் — 'இன்னொன்று குப்பைக் கூடைக்கு.' தமது அனுபவம்பற்றி இவ்வாறு கூறியவர் ஒரு இளம் இந்திய எழுத்தாளர். அயோவா பல்கலைக்கழகத்தின் சர்வதேச எழுத்துத் திட்டத்தில் கலந்து கொண்டவர்களில் ஒருவர். புதுடில்லியைச் சேர்ந்த மிஸ் இந்திராபாய் அவர்.

இந்திராபாய் சென்ற மாதம் இந்தப் பல்கலைக் கழகத்தில் எம். ஏ. பட்டம் பெற்றார். இந்த எழுத்துத் திட்டத்திலே ஆசியா ஆப்பிரிக்காலத்தீன் அமெரிக்கா ஐரோப்பா ஆகிய கண்டங்களிலிருந்து 30 சிறந்த எழுத்தாளர்கள் கலந்துகொண்டகொண்டனர்.

சர்வதேச எழுத்துத் திட்டத்துக்கு இயக்குநராக இருப்பவர் பால் எங்கிள். எழுத்தாளர் பயிற்சித் திட்டமொன்றிலிருந்து தோன்றியது இது. 25 ஆண்டுக் காலமாக இந்தப் பயிற்சித் திட்டத்தை அவர் நடத்தி வருகிறார். சர்வதேச எழுத்துத் திட்டத்தின் நோக்கம். வெளிநாட்டு எழுத்தாளர்களை ஓராண்டு அமெரிக்காவில் ஆக்கமான எழுத்துப் பணியில் ஈடுபடுத்துவதற்கும் விவாதம் ஆலோசனை நடத்துவதற்கும் சுற்றுப் பயணம் செய்வதற்கும் கொண்டுவருவதாகும்.

எழுத்தாளரைச் சிந்திக்க வைக்கிறது இந்தத் திட்டம் என்கிறார் மிஸ் பாய். வகுப்பு அறைகளில் கருத்துரைகள் பெருகி வழிகின்றன—மற்றவர்களின் படைப்புக்களைக் குறை கூறுவதிலும், தம் சொந்தப் படைப்பைத் தாக்கிப் பேசுவதிலும், என்கிறார் அவர்.



சர்வதேச எழுத்துத் திட்டத்தில் கலந்துகொண்ட மிஸ் இந்திரா பாய் சில புத்தகங்களை ஆராய்கிறார்; உடன் இருப்பவர், திட்டத்தின் இயக்குநர் பேராசிரியர் பால் எங்கிள்.

அயோவா பல்கலைக் கழகத்தில் இரண்டாண்டுகள் தங்கியிருக்கையில் மிஸ்பாய் மூன்று அமெரிக்க எழுத்தாளர்களிடம் படித்தார்.

ராபர்ட்கூவர் ஒருவர்; இவருடைய சிறந்த முதல் நாவலுக்கு வில்லியம் ஃபாக்னர் பரிசு கிடைத்தது. கர்ட் வான்கட், மற்றொருவர். மூன்றாமவர் சிறுகதை எழுத்தாளர் யுஜீன் கார்பர். தமது படைப்புகளைப் பற்றிய பாராட்டுதலையும், அவற்றிலே காணப்பெற்ற குறைபாடுகளையும் நேரில் கேட்டார் மிஸ் பாஸ்.

இந்தச் சர்வதேச எழுத்துத் திட்டத்தில் தாம் கலந்துகொண்டது, தம்மைப் பல வழிகளில் மாற்றியுள்ளதென்று கூறுகிறார் மிஸ்பாஸ். எழுத்தாளர், வாசகர், ஒரு தனிநபர் என்ற நிலையில் தாம் மிகவும் மாறியிருக்கிறதாக அவர் கூறுகிறார். இந்தத் திட்டத்தில் பங்குகொண்ட மற்றவர்களைப்போல தாமும் சிறுகதைகளும், கட்டுரைகளும் எழுதியுள்ளதாக அவர் கூறுகிறார். இந்தத் திட்டத்தில் கலந்துகொண்ட பிறகு எழுத்திலே தமது நடை மாறியுள்ளதென்கிறார்.

'எழுதுவதில் பலவகை உத்திகள் உள்ளதை நான் இப்பொழுது நன்றாக உணர்ந்திருக்கிறேன். முன்பு எனக்கு வாசகர் என்ற நிலையிலே இவை தெரிந்திருக்கவில்லை. இப்பொழுது நான் சிறந்த வாசகராகிவிட்டேன்.

தமது சிறுகதைப் படைப்புகளில் ஒன்றான 'ஏ ரிஸார்ட் ஃபார் அவுல்ஸ்' (ஆந்தைகளுக்கு உறைவிடம்) என்ற சிறுகதையை பல்கலைக் கழக ரேடியோ நிலையத்தில் மிஸ்பாய் வாசித்தார். இமயத்தின் அடிவாரம் இக்கதையின் பின்னணி. மலைவாசிகளுக்கும் சமவெளி மக்களுக்குமிடையேயுள்ள சச்சரவுகளையும் இந்தப் பிராந்தியத்தின் கட்டுக்கதைகளைப் பற்றியும், முன்காலத்தில் அவை எப்படியிருந்தன, நவீன காலத்திலே அவை எவ்வாறு பாதிக்கப்பட்டிருக்கின்றன என்பதைப் பற்றியும் இச்சிறு கதை சித்தரிக்கிறது.

இந்தத் திட்டத்தின் சிறப்புப் பயன்களின் ஒன்று உலக இலக்கியம்பற்றி அறிந்துகொள்ள அது வழங்கிய வாய்ப்பாகும்.

தம்முடைய தமது நாட்டைப்பற்றியும் தம்மைப் பற்றியும் புதிய கருத்துக்கள் தோன்றத் தொடங்கியது அயோவாவில்தான் என்கிறார் அவர். இது தாம் இந்தியாவுக்குத் திரும்பிய பிறகும் தொடர்ந்து இருக்கும் என்கிறார். இந்தியாவில் அவர் பல்கலைக்கழக ஆசிரியையாகப்பணியாற்ற விரும்புகிறார்.

——

# தரிசு நிலங்களில் காடுகள்

நிலத்தில் பயிர்ப்பச்சை அது கண்ணுக்கு அழகு தரும். அடர்ந்த காடு இருந்தால் கண்ணுக்கு அழகோடு தனிப்பயனும் உண்டு. எல்லா மண்ணிலும் நாம் நினைத்தபடி பயிர்களை உண்டாக்கிவிட முடியாது. ஆனால் காடு உண்டாக்குவது எந்த நிலத்திலும் அவ்வளவு சிரமமல்ல. எந்தப் பருவத்திலும் எவ்வித மண்ணுள்ள நிலத்திலும் காடு உண்டாக்கும் முயற்சியை மேற்கொள்ளலாம். அதற்கு அதிகமான செலவும் தேவையில்லை.

இந்தியாவில் ஏராளமான தரிசு நிலங்கள் இருக்கின்றன. சில இடங்களில் மழை வசதியோ, பாசன வசதியோ இல்லாததால் அங்கு எந்தப் பயிரையும் லாபகரமாகப் பயிரிட முடிவதில்லை. வளமற்ற ஒரு சில பிரதேசங்களிலும் ஒரு சில நிலங்களிலும் காடுகளைத் தவிர வேறொன்றையும் வளர்க்க முடியாது. அப்படிப்பட்ட இடங்களில் கருவேல், நாவல், வேம்பு, சவுக்கு, மூங்கில், இலுப்பை மற்றும் பல மரங்களையும் வளர்த்துவிட்டால் பொருளாதார ரீதியில் அவை நாட்டுக்கு மிக நன்மை தரும்.

காடுகள் நமக்கு வீடுகள் கட்டவும், மரச்சாமான்கள் செய்யவும் வேண்டிய மரங்களைத் தருகின்றன. நமது சமையலுக்கு வேண்டிய விறகைத் தருகின்றன. கால்நடைகளுக்கு வேண்டிய இலை தழைகளைத் தருகின்றன. நாவல், இலந்தை முதலிய பழ மரங்களை வளர்த்தால் உண்ணத்தக்க பழங்களும் அவற்றில் கிடைக்கும். 'டர்பன்டைன்' 'ரெஸின்' முதலான செய்வதற்கேற்ற பொருள்களும் காடுகளில் கிடைக்கும். தேகநலம்தரும் தேன் அங்குக் கிடைக்கும். அன்றாட வாழ்வுக்கு இன்றியமையாததாக ஆகிவிட்ட காகிதம் செய்வதற்கேற்ற கச்சாப் பொருட்களும் கிடைக்கும். வீடு கட்டுவதற்கு உதவக்கூடிய கட்டுமாறிலிருந்து விதவிதமான மருந்துகள் செய்வதற்கேற்ற பொருள்கள்வரை பலவற்றையும் நாம் காடுகளிலிருந்து பெறலாம்.

காடுகள் மிகுதியாக இருந்தால் காலத்தில் மழை மழை பெய்யும். கோடையில் நம் கால்நடைகளைக் கொண்டுபோய் அங்கு நிழலில் அடையவிட்டு மேய்க்கலாம். புயற்காற்று முதலாயின வீசும்போது வயலில் பயிர்கள் சேதமடையாமல் காப்பதற்கும் பக்கத்திலுள்ள காடுகள் தடுப்புச் சுவர்போல நின்று உதவும்.

காடுகள் அடர்த்தியாக இருந்தால் சுற்றியுள்ள நிலங்கள் நாளடைவில் வளமுடையதாக மாறும். நில அரிப்பைத் தடுத்து மண்ணைப் பாதுகாப்பதற்கும் காடுகள் ஒருவகையில் துணைபுரிகின்றன.

நவீனகாலவாழ்க்கையில் தொடர்ந்து வாழ்ந்து சில சமயங்களில் அலுப்படைகிறார்கள். அவர்கள் விடுமுறை நாட்களில் கேளிக்கையாகக் காடு சூழ்ந்த பகுதிகளில் சென்று வனவிலங்குகளையும், இயற்கைக் காட்சிகளையும் பார்த்து மகிழ்ந்து மன அமைதி பெறவும் காடுகள் உதவும்.

இப்படிப் பல வகைகளில் சமுதாயத்திற்கு எதவுவதாயுள்ள காடுகளை ஒன்றுக்கும் உதவாத தரிசு நிலங்களில் வளர்ப்பதற்கு அரசும் மக்களும் அக்கரை காட்ட வேண்டும்.

தமிழ் நாட்டிலும், ஆந்திரப் பிரதேசத்திலும் மற்றும் பல மாநிலங்களிலும் கரிசல் மண் நிலங்கள் நிறைய இருக்கின்றன. பல இடங்களில் அந்நிலங்களில் பருத்தி முதலான பணப் பயிர்களைப்பயிரிடுகிறார்கள்.

சிறிதளவேணும் பாசன வசதியும், பிறசில சௌகரியங்களும் இருந்தால்தான் இது முடியும். உதாரணமாக மைசூர் மாநிலத்திலுள்ள பெல்லாரி மாவட்டக் கரிசல் நிலங்கள் அடிக்கடி தண்ணீர்ப் பஞ்சத்திற்குள்ளாகின்றன. மழை பெய்த ஆண்டுகளில்கூட அங்கு பயிர் செய்தால் வருஷத்தில் 120 முதல் 300 ரூபாய்க்கு மேல் வரும்படி கிடைப்பதில்லை. மழை பெய்யாத காலங்களில் நிலைமை இன்னும் மோசமாயிருக்கும். அந்தக் கரிசல் மண் பிராந்தியத்தில் காடுகளே இல்லாததால் பக்கத்து இடங்களில் விறகுக்கும், கால்நடைகளுக்குத் தேவையான இலைதழைகளுக்கும் ஏற்படும் பஞ்சமோ கொஞ்சநஞ்சமல்ல. இப்படி ஒன்றுக்கும் உதவாமலிருக்கிற பிராந்தியங்களிலெல்லாம் வறட்சியையும் சமாளித்து வளரக்கூடிய மரங்களை நட்டு வளர்த்தால் அவைகள் நாட்டின் செல்வமாக மாறும். காடுகள் அளர்த்தியானால் நாளடைவில் களர் நிலமுங்கூடச் சிறிது சிறிதாக வளம் பெற்று நல்ல நிலமாக மாறக்கூடும். எனவே தேசியகவி சுப்பிரமணிய பாரதியார் 'காடு வளர்ப்போம்' என்று முழங்கிய குரல் ஒவ்வொருவர் காதிலும் ஒலித்துநடைமுறைக்கு வரவேண்டும். தரிசு நிலங்களை வீணாகப் போட்டு வைத்திருக்கும் நிலச்சுவான்தார்கள் காடு வளர்ப்பில் கவனம் செலுத்தலாம். அது இல்லாதோர் அரசு செய்யும் காடு வளர்க்கும் முயற்சிகளில் ஒத்துழைக்கலாம். அதுவும் செய்ய இயலாதோர் காடு வளர்க்கும் நன்மைகளையாவது சக்தியுடையவர்களுக்கு எடுத்துச் சொல்லலாம்.

# விளையாட்டாவது வெங்காயமாவது !

1972ல் மேற்கு ஜெர்மனியில் உள்ள நகரில் நடைபெறவிருக்கும் ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டியை ஒட்டி அங்கு ஒரு குறிப்பிட்ட இடத்தில் விளையாட்டுத் திடலையும் போட்டியில் கலந்து கொள்ள பல்வேறு நாடுகளிலிருந்தும் வரும் குழுவினருக்கு இட வசதி செய்து கொடுக்கவும் மூனிச் நகராட்சியும் ஒலிம்பிக் விளையாட்டு செயற்குழுவும் முடிவு செய்தன. ஆனால் அந்த இடத்தில் 87 வயதாக ரஷ்யப் பாதிரியார் ஒருவர் பல ஆண்டுகளாக தேவாலயம் ஒன்றை அமைத்து வாழ்ந்து வருகிறார். அவரோடு கூட மூதாட்டி ஒருவரும் தேவாலயத்தைச் சுற்றி தோட்டம் போட்டு காய் கனிகளைப் பயிரிட்டு வருகிறார். விளையாட்டுப் போட்டியை நடத்துவதன் பொருட்டு காய் கனிகளைப் பயிரிட்டு வருகிறார். விளையாட்டுப் போட்டியை நடத்துவதன் பொருட்டு அந்த இடத்தைக் காலி செய்யுமாறு நிர்வாகிகள் அவர்களிடம் கேட்டுக்கொண்டபோது 'விளையாட்டாவது வெங்காயமாவது நான் இங்கிருந்து நகரமுடியாது' என்று கண்டிப்பாகக் கூறிவிட்டார். இந்த வெண்தாடி வேந்தர். கிழவரையும் கிழவியையும் எப்படியாவது அங்கிருந்து கிளப்பி விட நிர்வாகிகள் எவ்வளவோ முயன்றும் இறுதியில் கிழவரின் பிடிவாதம்தான் வென்றது! ஒலிம்பிக் பந்தயக் குழுவினரும் தொண்டு கிழவருக்கும் நடந்த போட்டா போட்டியில், கிழவரே வெற்றியடைந்தது வேடிக்கைதானே!

[யூ. பி. எஸ்.]

[5-ம் பக்கத் தொடர்ச்சி ]

வாழ்க்கையில் வளம்பெறுவதற்குரிய வாய்ப்புக்களை வழங்குவதற்கு ஏற்ப அவர்களது கல்வி முறை அமைக்கப் பெற்றுள்ளது என்று தமிழகக் கல்வித் துறைத் துணை இயக்குநர் குறிப்பிட்டார். கொள்கைகள் வகுப்பதிலும், கல்வியை உருவாக்குவதிலும் மாநிலக் கல்வி ஆலோசனைக் குழுக்கள் அமெரிக்காவில் முக்கிய பங்காற்றுவதைத் தமிழக அதிகாரி கண்டறிந்தார். 'தமிழ் நாட்டில் நாமும் பள்ளிக் கல்வி முறையில் ஆலோசனைக் குழுக்கள் அமைத்து வருகிறோம்; ஜனநாயக முறையைக் கடைப்பிடிக்க முற்பட்டுள்ளோம்' என்றார். மோகனரங்கம்.

அமெரிக்க மக்கள் இந்தியாவிடம் மிகுந்த அக்கறை கொண்டுள்ளதாகவும், இந்நாட்டின் பிரச்னைகள் குறித்துப் பரிவு காட்டுவதாகவும், சமுதாய நிலைமைகள் குறித்து வியப்படைந்துள்ளதாகவும், அவர் தெரிவித்தார் எல்லையில்லாத நல்லெண்ணம் இருக்க நான் கண்டேன்' என்று கூறி முடித்தார், மோகனரங்கம்.

---

அரசுக்கு புகழ் ஆவது
ஜனநாயகத்திலுள்ள சுதந்திரமே;
ஆகையால் இயற்கையின்
சுதந்திர மனிதன்
ஜனநாயகத்தில் மட்டுமே
வாழ இசைவான்.

— பிளேட்டோ

---

[ 2-ம் பக்கத்தொடர்ச்சி ]

கும் எதிராகப் பாகிஸ்தானைப் பயன்படுத்தவெண்ணிய அமெரிக்கா இப்போது விழித்துக்கொண்டது.

முன்பு அமெரிக்காவும் ருஷியாவும் கீரியும் பாம்புமாக இருந்த நிலைமாறி, இன்று அத்தேசங்களிரண்டும் நாயும் நரியும்போல உறவாடத் தொடங்கிவிட்டன. அவ்வுறவின் பலனாக நரிநாய் எனப்படும் 'அல்சேஷியன்' பிறக்கலாமல்லவா?

அமெரிக்காவுக்கும் சீனாவுக்கும் ஜன்மப் பகையாக இருக்குமெனப்பலபேர் நம்மில் மனப்பால் குடித்தார்கள். ஆனால் இன்று சீனாவுடன் உறவாட வேண்டுமென்ற ஆவல் அமெரிக்காவில் தோன்றியுள்ளது.

அதேமாதிரி ருஷியாவுக்கும் சீனாவுக்குமிடையே இன்றுள்ள பூசல் என்றும் நிலைத்திருக்குமென்று எண்ணுகிற முட்டாள்களும் நம்மிடையே இருக்கின்றனர்.

உன்னை நீ அறிவாயாகில் உனக்கொரு கேடுமில்லையென்று கைவல்யத்தில் கூறியுள்ளபடி, நம்மை நாம் நன்றாக அறிந்து, நமது நாட்டின் நலன் ஒன்றையே கருத்தில்கொண்டு, சர்வதேச அரங்கில் நிலையான பகையும், நிரந்தரமான உறவும் கிடையாதென்பதையும் உணர்ந்து, நமக்குப் பயன்தரும் காரியங்களைச் செய்யவல்ல 'இளகிய பதத்தில்' நமது கொள்கைகளை நாம் வைத்திருந்தால் எவ்விதப் பதற்றமும் நாம் கொள்ளமாட்டோம்.

---

**கும்பகோணம் டி. மு. கோ.**
E. A. 81, 82, 83 / 68
S. C. 722 of 65

பர்வதத்தம்மாள் —வாதி
பாப்பம்மாள் —8ம் பிரதிவாதி

ஷை நம்பரில் இறந்த முனிய முத்திரியருக்கு தங்களை வார்சாக சேர்த்துக்கொண்டும் மைனர் ஜெயகுமாருக்கு தங்களை கார்டியனாக ஏற்றுக்கொண்டும் டிகிரியை குளித்தலை டி. மு. கோர்ட்டுக்கு மாத்தவேண்டுமென்று வாதி மனு கொடுத்து இருப்பதால் தங்களுக்கு ஏதாவது ஆக்ஷேபனை இருந்தால் 16—8—68ல் காலை 11 மணிக்கு ஆஜராகி தெரிவித்துக்கொள்ளலாம்.

K. ரங்கநாதன்
1/7779/7 அட்வகேட்

---

**சிதம்பரம் டி. மு. கோ:**
O. P. No. 24/68

பக்கிரி முகம்மது —மனுதார்
ஆயிஷா பீவி வகையரு —எதிர்மனுதார்கள்

ஆயங்குடி குள்ளன் மகன் கணபதி அப்துல்ஜப்பார் சாயபுக்கு 2—7—65ல் எழுதிக்கொடுத்திருக்கும் பிராமிசரி நோட்டை மனுதாரர் அப்துல் ஜப்பார் வாரிசுகளால் மேடோவர்பெற்று ஷை நோட்டின் பாக்கி அசல் வட்டியை வசூலிக்க மனுதாரர் தனக்கு வார்சு சர்ட்டிபிகேட் கொடுக்கவேணுமென்று மனுக்கொடுத்து 26—8—68ல் ஈரங்கி வைக்கப்பட்டிருக்குது. ஆக்ஷேபனையுள்ளவர்கள் அன்று பகல் 11 மணிக்கு தெரிவித்துக்கொள்ளாவிட்டால் Exparte முடிவு செய்யப்படும்.

K. குஞ்சிதபாத அய்யர்
3/7782/9 அட்வகேட்

---

**திண்டிவனம் டி. மு. கோ.**
S. C. 468/68

திண்டிவனம் தாலுக்கா கீழ் எடையாளம் கிராமத்தில் இருக்கும் பொன்னுசாமி மனைவி அஞ்சலை அம்மாள் —வாதி

ஷை கிராமத்தில் இருக்கும் பட்டாணி குமாரர் ஏகாம்பரம். —பிரதிவாதி

வாதிக்கு பிரதிவாதி 26—12—65 ரூ. 300க்கு எழுதிக்கொடுத்த புரோநோட்டு பேரில் தாவா செய்து ஈரங்கி 20—8—68ல் வைக்கப்பட்டிருக்கிறது. அன்று ஆஜராகத் தவறினால் Exparte தீர்ப்பு செய்யப்படும்.

V. சுப்ரமணியம்
/7783/10 அட்வகேட்



Edited and Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.
Annual Subscription Incuding 4 special numbers Rs. 10.